


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
31st year
of Publication

19—12—1965


# ஒரே நாடு, ஒரே மக்கள்

ஆக்ரமிப்புப் போர் தொடுத்து இந்தியாவை அடிபணிய வைத்துவிடலாம் என்று பாகிஸ்தான் பகற்கனவு கண்டது. அதன் எண்ணத்தில் மண் விழும் வகையில் பாரதம் வீறுகொண்டெழுந்து பதிலடி கொடுத்துப் பாதகர்களை புறங்கண்டிருக்கிறது. இன்று அல்லும் பகலும் தங்களது கடமைகளை அயராது ஆற்ற 45 கோடி மக்களும் துடிப்புடன் இருக்கின்றனர்.

எதையும் நாட்டிற்காகத் தியாகம் செய்யச் சித்தமாக இருக்கின்றனர். இந்த எழுச்சிக்குக் - காரணமானவர்கள், களத்தில் போரிடும் ஜவான்கள் மட்டுமல்லர்; பாகிஸ்தானின் ஆக்கிரமிப்பை முறியடிப்பதற்கு இந்நாட்டின் ஒவ்வொரு கிராமத்திலும், பட்டணத்திலும் தத்தம் வழிகளில் பணிசெய்துவரும் ஆயிரக்கணக்கான வீரப்புதல்வர்களையும் இதற்குக் காரணமாகச் சொல்லலாம். அவர்களது பெயர்களும் வீர சாகஸங்களும் எழுதி வைக்கப்படாமல் போகலாம். ஆனால் அவர்கள் நாட்டின் வரலாற்றில் ஒரு புதிய அத்தியாயத்தையே படைத்திருக்கிறார்கள் என்பதில் ஐயமில்லை.

பிரமாதமாகப் பேசப்பட்ட பாகிஸ்தானிய போர்க் கவசங்களைப் பொடியாக்கிய பாரத வீரர்களில் பலர் இன்று அமரத்துவம் அடைந்து விட்டனர். இந்தியாவின் பல்வேறு பகுதிகளைச் சேர்ந்த வீரர்கள்கள் அவர்கள்.

மீரட் ஜில்லாவில் ஃபதேபுர் கிராமத்தில் ஒரு சிறு வீடு. தள்ளாடும் அந்த மூதாட்டியின் மகன்தான் மேஜர் ஆஸா ராம் தியாகி, பாகிஸ்தானிய ஆக்ரமிப்பில் தன் இன்னுயிரை ஈந்த வீரர். என் மகன் எல்லாக் குண்டுகளையும் மார்பில் தான் தாங்கிக் கொண்டான். முதுகில் ஒன்று கூடப்படவில்லை’ என்று பெருமிதங் கொள்கிறது தாயுள்ளம். ‘உன் முழு பலத்தோடும் போரிட்டு உனக்கும் தாய்நாட்டுக்கும் புகழ் கொண்டுவா’ என்பதுதான் அவர் தம் மகனிடம் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள்.

மீரட் நகரிலிருந்து 12 மைல் தொலைவில் ரோஹ்தா கிராமம். இங்கு வசிக்கும் ஸ்ரீமதி மன்னோ தேவி என்ற வீரத்தாயின் புதல்வர்தான், சம்ப் பகுதியில் வீர மரணம் எய்திய ஸெகண்ட் லெஃப்டினென்ட் லக்ஷ்மண் சிங் மோதி. ஸ்ரீமதி மன்னோ தேவி, எஞ்சியுள்ள தம் நான்கு புதல்வர்களையும், நாட்டுக்கு அர்ப்பணிக்க நல்ல முறையில் வளர்த்து வருகிறார்.

ரோஹ்தா கிராமம் ராணுவத்திற்கு 150 பேரை அனுப்பியுள்ளது. இந்தக் கிராமத்தைச் சேர்ந்த தாரா சந்த் சொல்கிறார். “நாட்டைக் காக்க ஒவ்வொருவரும் போர் வீரராக வேண்டும்; ஒவ்வொரு வீடும் கோட்டையாக வேண்டும்.” இவருடைய புதல்வர்களும் உறவினர்களுமாக ஒன்பது பேர் ராணுவத்தில் உள்ளனர்.

இதே கிராமத்தைச் சேர்ந்த ரக்பீர் சிங் என்ற ஹரிஜனும், அவரது மனைவியும் ஏற்கெனவே மூன்று புதல்வர்களை ராணுவத்தில் சேர்த்திருப்பதுடன், மேலும் இருவரைச் சேர்க்கவும் திட்டமிட்டுள்ளனர்.

பாகிஸ்தானியர்களை ஏராளமாகப் பலிகொண்டு உயிர்த்தியாகம் செய்த மேஜர் ரண்பீர் சிங்கின் மனைவியார் ஸ்ரீமதி சுரேந்த்ர குமாரி, தாய் நாட்டுக்காகத் தம் கணவர் ஆற்றிய கடமைக்காகப் பெருமிதம் கொள்கிறார். “இந்தியாவின் கவுரவத்திற்கோ தாய் நாட்டுக்காக உயிரை அர்ப்பணித்த வீரர்களின் கவுரவத்திற்கோ இழுக்கான உடன்பாடு எதையும் பாகிஸ்தானுடன் செய்து கொள்ள மாட்டோம்” என்று பிரதம மந்திரி ஸ்ரீ லால்பஹாதுர் சாஸ்திரி எழுதியுள்ள அனுதாபக் கடிதத்தை இவர் பொன்போல் போற்றி வருகிறார்.

உத்தர் ப்ரதேஷில் புலந்த்ஷஹர் ஜில்லாவில் ஸயீத்புர் என்றொரு கிராமம். இங்குள்ள 1000 குடும்பங்களும் 1,200 பேரை ராணுவத்திற்கு அனுப்பியுள்ளன. இன்னும் பலர் ஆர்வத்துடன் சேர்ந்து வருகின்றனர். இங்குள்ள மூன்னாள் ராணுவ வீரர்கள் 800 பேரில் ஒருவரான கேப்டன் ரக்பீர் சிங், கேம் கரன் பகுதியில் வீர மரணம் எய்திய தம் மூத்த மகனான ஸெகண்ட் லெஃப்டினென்ட் சுச்பீர் சிங் பற்றிக் குறிப்பிடும் பொழுது பெருமிதங் கொள்கிறார். இந்த வீர மைந்தன் போர்க்களத்திலிருந்து எழுதிய கடிதம் இன்று வீட்டை அலங்கரிக்கிறது. வீரத் தந்தைக்கு வீர மைந்தன் வரைந்த கடிதம் ‘நேரம் வந்து விட்டது. நான் போகிறேன். இன்று தாய் நாடு என்னை அழைக்கிறது. நமது குடும்பப் பாரம்பரியத்திற்கு இழுக்கான எதையும் நான் செய்யமாட்டேன்…’

தீரமிக்க ஒரு வீரரை மணந்த அவர் துணைவியார் ஸ்ரீமதி சந்த்ரா ஸ்ரோஹி கூறுகிறார். ‘மரணத்தை வெல்ல முடியாது. ஆனால் என் கணவர் தாய் நாட்டுக்காகத் தம்மைத் தியாகம் செய்தது பற்றி நான் பெருமிதம் அடைகிறேன்.’

[12-ம் பக்கம் பார்க்க]

இலக்கியப்பண்ணையில்

# புதிய அறுவடை

பரதேசி

திருச்சியிலிருந்து வெளிவரும் எழுத்தாளன் சிறப்பு மலர் குறிப்புகளுடன் இப் புதிய அறுவடை முடிவடைகிறது.

நடந்ததையும், நடப்பதையும் எழுதுவது எல்லோருக்கும் எளிது. அதற்கு 'ரிபோர்ட்டர்' போதும் — ஆனால் நம் பிரச்னைகளைத் தீர்க்க என்ன நடக்கவேண்டுமோ அதைச் சுட்டிக்காட்ட வேண்டியது சிறந்த கலைஞனின் வேலை—எழுத்தாளனின் பணி-சிறு கதையில் "கௌரவயுத்தம்" தொடங்கிய ஏ. எஸ். ராகவன் இந்தச் சிறந்த சாதனையைச் செய்திருக்கிறார். தன் சொந்தப் பிள்ளையைப் பற்றி தந்தை தெரிந்துகொள்ள முடியாததை வேறொருவர் வீட்டில் பிறந்து வளர்ந்த பருவப் பெண்ணால்தான் இயலும் என்பதை வனஜா எம். ஏ. நிரூபித்திருக்கிறாள். [பெற்றோர்களுக்கு ஒரு வார்த்தை — பையன் படிக்காவிட்டால் பரவாயில்லை; படித்த பெண்ணின் ஆதரவு எப்படியும் அவனுக்குக் கிட்டி விடும்]

*

உத்தியோகத் துறையில் ஆண்களோடு பெண்களும் போட்டியிட வேண்டியிருக்கும் நடைமுறைச் சிக்கலில் நளினமான முடிவுக்குப் "போட்டியின் முடிவு" வகை செய்கிறது. எழுதியவர் 'ராதிகா'

பெண்ணுக்கு உறுதுணையாகவர அவள் அழகை ரசிக்கத் தெரிந்தவனைவிட அவளைப் பாதுகாக்கும் உடல் வலிவும் மெய்த் துணிவும் உள்ளவன்தான் தகுதியுள்ளவன் என்பதைக் 'காவலன்' மூலம் நாமறிகிறோம் - கதாநாயகி கீதாவே ஒப்புக்கொள்கிறாளே! வழங்கியவர் S. ரங்கநாயகி.

*

'பிஞ்சுக்குர'லில் பெற்றோர்களின் பரிவுக்காகத் துடிக்கும் துடிப்பையும் பின்பு தனக்குப் பின் மலர்ந்த தம்பி — தங்கை இரட்டைப் பொம்மைகளின் 'அண்ணா' என்கிற பெருமையையும் ஒலிக்கவைக்கும் டி. எஸ். கோதண்டராமன் மிகப்பெரியவராக வளர்ந்துவிட்டார்.

*

வறுமைச் சூழ்நிலையிலோ வேறு வாய்ப்பற்ற நிலையிலோ வாழமுடியாத அபலையை ஊமையாக்கி அவளிடமிருந்து சமூக கொடுமைக்கு விடுதலை தந்துள்ளார் கலையன்பன். அவர் தாக்குதலால் ரத்தகாயமேற்படவில்லை - ஆனால் ஊமைக் காயம் உயிரை வாட்டுகிறதே!

*

'பூவுலிங்கம்' என்று பெயரளவுக்கு ஒரு பாத்திரத்தை வைத்து — உண்மையில் வாசகர்களாகிய நடி உணர்ச்சியையும் தூண்டிவிட்டு நாம் காணும் கற்பனைக்கும் நடைமுறைக்கும் நேர்மாறான தொடர்பிருக்கும் வேதனையை வடித்துப் 'பேரிழப்'பாக வழங்கியிருக்கிறார் திரு. வல்லிக்கண்ணன்.

*

நமது சுதந்திர பாரதத்தின் தலைநகரான தில்லியில் பல்வேறு துறைகளில் தமிழ் எப்படி வளர்ந்து வருகிறது என்னும் விந்தையைத் திருமதி. கனகசவுந்தரி இளந்திரையன் தலைநகரில் தமிழ் எனும் கட்டுரையில் விளக்கியிருக்கிறார். மதராசிப்பள்ளியில் தமிழ் போதிக்கப்படும் நிலைபற்றி 'தமிழ்நாட்டு அரசினரிடம் பெருந்தொகை நன்கொடையாகப் பெற்றுவிட்டோமே என்னும் நன்றிக்கடனுக்காகவுமே இங்கே தமிழ் பயிற்றுவிக்கப்படுவதாகத் தெரிகிறது' என்கிற வரிகள் கவனத்துக்குரியவை. தமிழ்நாட்டுப் பள்ளிகளில் மத்திய சர்க்காரின் மானியம் பெற்று வருகிறோமே என்பதற்காகவே ஏதோ 'இந்திப் பயிற்சி'க்கு வகை செய்யப்பட்டிருப்பது போன்ற பேருண்மை இது.

*

தற்காலக் கவிதைகளைப் பற்றிய துணிகரக் கருத்தை வெளியிடும் 'வளர்வோன்' நம் கவிவாணர்கள் யாப்பு அமைக்கும் திறம் தம் கைக்கு வந்திருப்பதால் கருத்துப் பிரசாரத்துக்காக எதை எதையோ எழுதிக் குவித்துக் கொண்டு போவதை வேதனையுடன் வெளியிட்டிருக்கிறார். பாரதிதாசனின் கவிநயம் — அரசியல் கருத்துப் பிரச்சார வேட்கைக்குப் பலியானதை அவர் சுட்டிக்காட்டியிருப்பது மற்றவர்களுக்கு நல்ல எச்சரிக்கை. சமய நெறிப் பிரச்சாரகர்களும் ஆன்மீக வழித் தொண்டர்களும் அரசியல் வாதிகளாக மாறும் 'கண்ணறாவி'க் காட்சிகளையும் இங்கே மறக்க முடியவில்லை!

*

சின்ன மீன் பெரிய மீனிடம் 'ஐயா! என்னை நீ விழுங்குவது நியாயமா?' என்று தார்மிகப் பிரச்னையைக் கிளப்பியபோது 'நீ தான் என்னை விழுங்கிவிட்டேன்!' என்று பெரிய மீன் தன்னை அர்ப்பணம் செய்து பதிலளித்ததும் கூடச் சிறுகதை

[11-ம் பக்கம் பார்க்க]

## வாழ வரம் வேண்டும்

இறைவா இங்கே வரவேண்டும்—வரம்
இன்றே நீயும் தரவேண்டும்—உன்னை
மறவாதிருக்கும் மனம் வேண்டும்—உலகில்
மகிழ்வாய் வாழும் திறம்வேண்டும்

அழியாப் புகழைப் பெறல்வேண்டும்—வீணே
ஆத்திரம் கொள்வதை விடல்வேண்டும்
சலியா துழைக்கும் உரம்வேண்டும்—மனச்
சஞ்சலந் தவிர்க்கும் திடம்வேண்டும்

நல்லதைச் செய்திடப் பொருள்வேண்டும்—தினம்ச்
நன்மை நாடிடும் உளம்வேண்டும்
உன்னைத் தேடிடும் அருள்வேண்டும்—என்றும்
உண்மையே பேசிடும் நிலைவேண்டும்

துன்பங் கண்டே துவளாமல்—நான்
துடிப்பாய் செயல்பல செய்திடவும்
அன்பால் உலகை வாழ்விக்கும்—நல்ல
ஆக்கமும் ஊக்கமும் இனிவேண்டும்

போதுமென்ற நிறை வேண்டும்—பிறர்
புகழ்ச்சியில் மயங்கா நிலைவேண்டும்
சூதும் வாதும் விடவேண்டும்—நான்
சுகமாய் வாழ வரம்வேண்டும்

— திருச்சி திருமாறன்

# வலியில்லாப் பிரசவம்

15 அல்லது 20 ஆண்டு கட்கு முன்பிருந்த மகப் பேறு விடுதிகளுக்கும், இன்றைய விடுதிகளுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. முன்பு அவ்விடுதிகளில் எழுந்த கூக்குரல்களும், பிரசவ வலி தாங்காது தாய் மார்கள் எழுப்பிய அலறல் களும் இன்று கேட்கப் படுவதில்லை.

30 ஆண்டுகளாக, சோவியத் நாட்டில் நடந்த பலப்பல ஆராய்ச்சிகளின் விளைவாக, பிரசவ காலத் தில் ஏற்படும் வலி அறவே தடுக்கப்பட்டு விட்டது எனலாம். பிரசவ காலத் தில் உபயோகிக்கக் கூடிய வலி நீக்கிகள், பிற வலி நீக்கிகளைப் போன்றவை யாக இருக்க முடியாது.

பிரசவகால வலியின் தோற் றமும், அதன் கால நீடிப் பும் விசேஷ பிரச்சினைகளை உண்டாக்குகின்றன. உதா ரணமாக, சில பெண் களுக்கு வலி 24 மணி நேரத்திற்கு நீடிக்கக்கூடும்; அத்துணை காலத்திற்கு வலி நீக்கும் மருந்துப் பொருட்கள் எதுவும் கிடை யாது. மீண்டும், மீண்டும் தொடர்ந்து ஒரே மருந் தைக் கொடுப்பதும், தாய், சேய் இருவரின் நலனையும் பாதிக்கும்.

பிரசவ காலத்தில் தாய் உணர்வுடன் இருப்பது அவசியமாதலால், பொது வான மயக்க மருந்து கொடுக்கப்பட முடியாது. நரம்புகளை உணர்வறச் செய்வதும் கடினமே. ஆகவே, பலநாடுகளிலும் பொதுவாக உபயோகப் படுத்தப்படும் மருந்துமுறை பூரணமாகப் பிரச்சினை யைத்தீர்த்துவிட்டதுஎன்று கூற முடியாது.

1948-ல் கான்ஸ்தந்தின் பிளேட்டனேவின் தலைமை யில், வலியில்லாப் பிரச வத்தை ஏற்படுத்த, கர்ப்பப் பெண்களுக்கு ஊக்க உரை கள் கூறுவதன் மூலம், பிரசவத்திற்கு அவர்களைத் தயார் படுத்த முடியும் என்று கண்டறியப்பட்டது. இம்முறை பாவ்லோவின் ஆராய்ச்சிகளை அடிப்படை யாகக் கொண்டது. அதா வது, உடலில் நிகழும் அனைத்து உணர்வுகளும் — மகப்பேறு உட்பட — மிகச் சிக்கலான அனிச்சைச் செயல்களே என்பது அவ ரது அனுமானம். மகப்பேறு நாளத்தின் வழியே ஏற் படும் உணர்வுத் தூண்டல் மத்திய நரம்பு மண்டலத் திற்கும், மூளைக்கும் எடுத் துச் செல்லப்படுகிறது. மூளை, 'சம்பந்தப்பட்ட உறுப்புக்களுக்கும்',— கருப்பை, வயிற்று தசைகள் ஆகியவற்றிற்கும்—கட்டளை களைப் பிறப்பிக்கின்றது. மூளையின் கார்ட்டெக்ஸ் பகுதிக்குச் செலுத்தப்படும் தூண்டல் உணர்வுகளின் விளைவே, வலி. கார்டெக்ஸ் பகுதியிலிருந்து பிறக்கும் உணர்வே வலியாதலால், மூளையின் வேலை அமைப் பைச் சற்றுமாற்றினால், வலி உணர்வைத் தடுத்துவிட முடியும்.

இதை எவ்வாறு டாக்டர் கள் செய்வது ?

ஒரு வார்த்தையினால் அவர்கள் அதைச் செய்து விட முடியும். மூளையின் செயல் அமைப்பை ஒரு வார்த்தை மாற்றிவிட முடி யும். பின்னர் தூண்டுதல் உணர்வு வலியை ஏற்படுத் தும் திறனை இழந்துவிடு கிறது. மகப்பேற்றிற்கு இரண்டு மாதங்களுக்கு முன்னதாக, ஆரம்பித்து இந்த ஊக்க உரை முறை தொடர்ந்து கடைப்பிடிக்கப் படவேண்டும்.

மகப்பேற்றின் முன்னர், தாயை ஊக்க உரைகள் மூலம் தயார் செய்யும் முறை இருவகைப்படும். இதைப் பொது, விசேஷ முறைகள் எனலாம். பொது முறை பெண் கர்ப்பமுற்ற காலத்தி லிருந்தே தொடங்குகிறது. கர்ப்பமுற்ற பெண்ணை ஒரு மருத்துவ நிபுணர் பரி சோதித்து, அவளது கரு வின் வளர்ச்சியைத் தொடர்ந்து கவனித்து வரு கின்றனர். அதோடு, அத் தாய்க்கு தேவைப்படின் விசேஷ உணவையும், சில உடற்பயிற்சிகளையும் அளிக் கின்றனர்.

விசேஷ முறை, கர்ப்ப காலத்தின் 32-வது 33-வது வாரத்திலேயே ஆரம்ப மாகிறது. அதன் பின்னர், அப்பெண்ணிற்கு 10 தினங் கள் இடைவெளியில் ஆறு பயிற்சி வகுப்புக்கள் நடை பெறுகின்றன.

முதல் வகுப்பு அநேக மாக, டாக்டருடன் நட்பு முறையில் அளவளாவு தலே. தாய்மையடைதல் பற்றி அப்பெண் என்ன உணர்வைக் கொண்டுள்ள வள் என்பதை, அவளது பேச்சிலிருந்து டாக்டர் அறிந்து கொள்கிறார். பிரசவ வேதனை என்பது தவிர்க்கப்பட முடியாத ஒன்றல்ல என்றும், அவள் மனம் வைத்தால், வலி யைத் தடுத்துவிடக் கூடு மென்றும் அவர் அவளிடம் எடுத்துக் கூறுகிறார்.

பின்னர் உள்ள வகுப்புக் கள், ஏழு எட்டுப் பெண் களைச் சேர்த்துவைத்து நடத்தப்படுகின்றன. இரண் டாவது வகுப்பு, பிரசவம் என்ற செயலைப் பற்றிய விளக்க உரைகள் கொண் டது. குழந்தை பிறப்பதற்கு முன்னர், எப்படி ஆரம்ப மாகிறது என்பது மிகத் தெளிவாக இவ்வகுப்பில் கூறப்படுகிறது. மூன்றாவது, நான்காவது வகுப்புக்களில் பிரசவத்தின்போது ஒரு பெண் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும், எப்படிச் சரிவரச் சுவாசிக்க வேண் டும் என்பது எடுத்துக் கூறப்படுகிறது. 'வலியைத் தடுக்கும் சில குறிப்பிட்ட இடங்களை'த் தடவிக் கொடுப்பதன்மூலமாகவோ, அழுத்துவதன் மூல மாகவோ, அவள் வலி ஏற் படாமல் செய்துகொள்ள முடியும் என்று சில உத்தி களும் அவளுக்குப் போதிக் கப்படுகிறது.

இந்த வகுப்புக்களின் நோக்கம், பிரசவிக்கும் பெண் செய்யவேண்டிய சில செயல்களை அவள் சரிவர கடைப்பிடித்தால், வலியை அவள் தடுத்துவிட முடியும் என்பதை அவள் உணர வைப்பதே.

[10-ம் பக்கம் பார்க்க]

# ஜப்பான் அரசியல்

ஆசியாவிலேயே தொழில் துறையில் முன்னேற்றம் கண்டுள்ள நாடாகிய ஜப்பானின் பிரதமர் ஐஸாகு ஸாடோ பதவியேற்று அண்மையில் ஓராண்டு ஆகியுள்ளது. அவர் பதவி வகித்த நாளிலிருந்து பல இடுக்கண்கள் நிறைந்த பிரச்சனைகளுக்குத் தீர்வு கண்டுள்ளார். இத்தகைய பிரச்சனையில் முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது தென் கொரியாவுடன் ஜப்பானின் உறவு முறைகள் சகஜ நிலையை அடைய வேண்டி உருவாக்கிய உடன்படிக்கையை உறுதிப்படுத்தியது.

இவ்வுடன்படிக்கையை 467 அங்கத்தினர்கள் கொண்ட பாராளுமன்றத்தில் பிரேரேரித்த பொழுது, ஆளும் கட்சியின் 282 அங்கத்தினர்கள் அதற்கு ஆதரவு காட்டியதனால், அது நிறைவேற்றப்பட்டது. எதிர்க்கட்சியாகிய இடதுசாரி சோஷியலிஸ்டுகளும், நாட்டு தினசரிகளும் இவ்வுடன்படிக்கை விஸ்தாரமாக விவாதிக்கப்படவில்லையென்றும், அதை விவாதிக்கப் போதிய அளவு காலமும் பாராளுமன்றத்தில் ஒதுக்கப்படவில்லையென்றும் குறைகூறி, நிர்வாகத்தின் போக்கை "பாஸிஸப் போக்கு" என்று கண்டித்தனர். இவ்வுடன்படிக்கை நிறைவேற்றப்பட்ட போதிலும் இன்றும் அதைக் குறை கூறுவோர்களின் எண்ணிக்கை அதிகமாகவே உள்ளது என்று சொல்லப்படுகிறது.

பிரதமரின் மூத்த சகோதரர் நாட்டுப் பிரதமராகப் பதவியிலிருந்த பொழுது யூ. எஸ்.—ஜப்பான் பாதுகாப்பு உடன்படிக்கையை 1960-இல் பாராளுமன்றத்தில் இதே விதமாக அவர் துரிதப்படுத்தினார் என்றும், அதற்கு ஏற்பட்ட எதிர்ப்புகளையும், ஆர்ப்பாட்டங்களையும் அவர் சட்டை செய்யவில்லையென்றும் அதன் விளைவு அவர் பதவியை இழக்க நேரிட்டது என்றும் அரசியல் அறிஞர்கள் எடுத்துக் கூறுகிறார்கள்.

மிதவாதி — ஜனநாயகக் கட்சியைச் சேர்ந்த (64 ஆண்டுகள் நிறைந்தவரும், எப்பொழுதும் புகை பிடிப்பவருமான) இன்றைய பிரதமர் ஐஸாகு ஸாடோவுக்கு பலம் பெற்ற எதிரிகள் ஒருவரும் இல்லை என்பதனாலும், இன்றைய தென் கொரியா உடன்படிக்கை முந்தய யூ எஸ்—ஜப்பான் பாதுகாப்பு உடன்படிக்கையைப் போல் அவ்வளவு கடுமையானதல்ல என்பதனாலும், பதவியிலிருந்து பிரதமரை வெளியேற்றுவது சுலபமல்ல யென்று எண்ணப்படுகிறது. நாட்டுக் கன்ஸர்வேடிவ் கட்சியினர்கள் தென் கொரியா உடன்படிக்கை பிரதமருக்குப் பெருத்த அளவு வெற்றியளித்துள்ளது யென்றும் அவர் பதவியில் நீண்ட காலம் இயங்க ஆதரவளித்துள்ளது யென்றும் கூறுகிறார்கள். சாதாரணமாக அரசியலில் நிதானமான போக்கை இவர் அனுசரிப்பவர் யென்று பொதுவாக அபிப்பிராயங்கள் தலையெடுத்துள்ள போதிலும், இவருடைய போக்கு இவருடைய மூத்த சகோதரருடையது போல கடினமானது என்றுதான் எண்ணப்படுகிறது. நாட்டு கன்ஸர்வேடிவ் கட்சியினர் ஜப்பானின் "குரல்" இன்று வெளிநாட்டு விவகாரங்களில் எடுபடுவது இவருடைய முதிர்ந்த அரசியல் அனுபவத்தின் விளைவு யென்றும், பொருளாதாரத் துறையில் பெருத்த அளவு பலம் பெற்றுள்ள சில உலக நாடுகளின் வரிசையில் இன்று ஜப்பான் இடம் பெற்றுள்ளது இவருடைய நிர்வாகத் திறமையின் பிரதிஒலி என்றும் மேலும் கூறுகிறார்கள்.

இது நாணயத்தின் ஒரு புறம். மற்றொரு புறத்தை உற்று நோக்கினால் அது வேறு ஓர் காட்சியை அளிக்கிறது! நாட்டு தேசீயப் பத்திரிகையான "மெய்நீசி ஷிம்பன்" ஸாடோவின் நிர்வாகம் இவ்வோராண்டில் தவறான தீர்மானங்கள், மனவுறுதியற்ற நிலைகள், முதலியவைகள் நிரம்பியதாகக் காண்கிறது, என்று கூறுகிறது. செல்வாக்குப் பெற்ற "மெய்நீசி" என்ற பத்திரிகை "நாடு இவ்வோராண்டில் பொருளாதாரத் துறையில் பிற்போக்கு கண்டுள்ளது யென்றும், வேலையில்லாதவர்களுடைய எண்ணிக்கை அதிகமாகியுள்ளது யென்றும், கம்யூனிஸ சீனாவுடன் உறவு ஓர் குழப்பமான நிலையை அடைந்துள்ளது யென்றும், சுருங்கச் சொல்லின் எதிர்பார்த்த அளவுக்கு ஸாடோ நிர்வாகத்தின் முதலாண்டில் நாடு முன்னேறவில்லை" யென்றும் கூறுகிறது.

பாரபட்சமற்ற நோக்கம் கொண்டுள்ளவர்கள் வாஷிங்டன் — டோகியோ உறவு இவ்வோராண்டில் பலம் பெற்றுள்ளது யென்றும், அமெரிக்காவின் வியட்நாம் போருக்கு ஜப்பான் முழு அளவு ஆதரவளித்துள்ளது யென்றும், ஃபார்மோஸாவுடன் உறவு வளர்க்கப்பட்டுள்ளது யென்றும், வாணிபத் துறையில் ஏற்றுமதி அதிகப்படுத்தப்பட்டுள்ளது யென்றும், ஆப்பிரிக்கா ஆசியா நாடுகளினிடையே இந்நாடு தலைமை அந்தஸ்தைப் பெற்றுள்ளது யென்றும் கூறுகிறார்கள்.

ஸாடோ பதவியேற்ற பொழுது இவர் கன்ஸர்வேடிவ் கட்சியின் வலதுசாரியைச் சேர்ந்தவர் என்று பொதுவாக ஓர் அபிப்பிராயம் நாட்டில் நிலவியிருந்தது. ஆளும் கட்சியைச் சேர்ந்த வலதுசாரியினர் 20 ஆண்டுகளுக்கு முன்பு கட்சியில் பெருத்த அளவு ஆதிக்கம் செலுத்தி வந்ததனால் அந்நிலை மீண்டும் ஸாடோவின் மூலம் இடம்பெறுமோ என்று ஓர் கிலியிருந்து வந்தது. ஆனால், இவர் பதவியேற்றதும் தான் இடதுசாரியைச் சேர்ந்தவர் போல் நடித்துக் கொண்டார். பாராளுமன்றத்தில் ஓர் சமயம் இவர் "வட வியட்நாமில் யூ. எஸ்.ஸின். விமான குண்டு வீச்சு வருந்தத்தக்க செயல்" என்று கூறினார். "ஜப்பான் டைம்ஸ்" என்னும் பத்திரிகை இக்கூற்றுக்குக் குறை கூறியது. இப்பொழுது, பிரதமர் தன்னுடைய கொள்கைகள் யாவும் "மேல் நாட்டுக் கொள்கைகளைப் பின் பற்றும்" என்று கூறியுள்ளார். நாட்டில் பெரும்பாலானோர்கள் பிரதமரின் இக்கூற்றுக்கு ஆதரவளித்து வருவதாகத் தெரிய வருகிறது.

---

அரியலூர் டி. மு. கோ.
S. C. 2272/65

உ. தா. கஸ்பா அரியலூர் ராஜசேகர முதலியார் —வாதி

உ. தா. அம்பலங்கட்டை கணபதி மகன் நடேச படையாச்சி 1 வீரமுத்து மகன் கலியமூர்த்தி நயினார் 2. —பிரதிவாதிகள்

புரோநோட்படி ரூ. 237 பின் வட்டி செலவுடன் கிடைக்க தாவா செய்து 20-1-66-ல் ஈரங்கி. அன்று வராவிடில் எக்ஸ்பார்ட்டி தீர்ப்பு ஏற்படும்.

V. R. திருஞானசம்பந்தம்
1/6899/133 அட்வகேட்

ஜெனரல்

# திம்மையா மறைவு

சைப்ரஸிலுள்ள ஐ. நா. சமாதானப்படை தளபதி ஜெனரல் கே.எஸ். திம்மையா 18-ம் தேதி நிகோஷியாவில் உள்ள அவரது இல்லத்தில் மாரடைப்பு காரணமாக திடீர் என மரணமடைந்தார்.

ஜெனரல் திம்மையா மாஜி இந்திய பிரதம சேனுதிபதியாவார். சென்ற ஆண்டு ஜெனரல் திம்மையா இந்திய ஜெனரல் கியானியிடமிருந்து ஐ. நா. சமாதானப்படையின் தளபதி பதவியை ஏற்றுக் கொண்டார்.

ஜெனரல் திம்மையா மயங்கி விழுந்த உடனே நிகோஷியா ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு கொண்டு செல்லப்பட்டார். ஆனுல் ஆஸ்பத்திரியில் வந்தவுடன் இறந்தார்.

ஜெனரல் திம்மையாவுக்கு 59 வயதாகிறது. சமாதானப் படையை மேலும் 3 மாதத்திற்கு அங்கு வைத்திருக்க ஐ. நா. பந்தோபஸ்து கவுன்சில் நேற்றிரவு முடிவு செய்தது. இந்த முடிவு செய்யப்பட்ட சிலமணி நேரத்தில் ஜெனரல் திம்மையா மரணமடைந்தார்.

சைப்ரஸ் ஜனுதிபதி மகாரியோஸ் மற்றும் மந்திரி சபை மந்திரிகள் ஜெனரல் ஆஸ்பத்திரிக்கு வந்து ஜெனரல் திம்மையாவுக்கு இறுதி மரியாதை செலுத்தினர். இவரது மரணம் காரணமாக சர்க்கார் கட்டிடங்களில் கொடிகள் அரைக் கம்பத்தில் பறந்தன.

ஜெனரல் திம்மையா தமது வேலையை நன்கு கவனித்து வந்தார். தீவில் பல இக்கட்டான சந்தர்ப்பங்களை தவிர்த்து சமாதானத்தை நிலவச் செய்தார். பலதரப்பட்ட ராணுவத்தினரிடையே ஜெனரல் திம்மையாவுக்கு நல்ல மதிப்பு இருந்தது.

ஜெனரல் திம்மையா 1906 மார்ச் 31உ பிறந்தார். இவரது முழு பெயர் ஜெனரல்கோபேந்திர கெம்பைய திம்மையா ஆகும். இவர் பெங்களூர் பிஷப் காட்டன் ஆண்கள் பள்ளியில் கல்வி பயின்றூர். பிறகு டெராடூன் இந்திய ராணுவக் கல்லூரியிலும், இங்கிலாந்து சந்துரஸ்ட் ராயல் ராணுவப் பள்ளியிலும் படித்து 1926ல் இந்திய ராணுவத்தில் சேர்ந்தார். 1945ல் இவர் லெப்டினட் கர்னலானுர் 1948-50ல் காஷ்மீரில் இருந்த 26 பிரிவு கொண்ட இந்தியப் படைக்கு தலைவராக இருந்தார். 1950-51ல் டேராடூன் தேசிய தற்காப்பு அகாடமியின் கமாண்டராக இருந்தார். 1951-52ல் பாரிஸில் ஐ நா. இந்திய தூதுகோஷ்டியின் ராணுவ ஆலோசகராக இருந்தார். 1957ல் ஜெனரல் திம்மையா இந்திய பிரதம சேனுதிபதியானுர். 1954ல் இவருக்கு பத்ம விபூஷண் விருது வழங்கப்பட்டது.

இவர் மைசூர் ராஜ்யத்திலுள்ள கூர்க் ஜில்லாவைச் சேர்ந்தவர்.

## தொலைந்த தொப்பி

பேராசிரியர்களுக்கு மறதி மிக அதிகம் என்று உங்களுக்குத் தெரியுமல்லவா? பல்கேரியாவில் மறதிக்குப் புகழ் பெற்ற பேராசிரியர் அலக்ஸாண்டர் பாலபனேவ் ஒரு நாள் சோபியா நகரத் தெருவின் வழியே நடந்து கொண்டிருந்தார். திடீரென வீசிய காற்று, அவரது தொப்பியை தலையினின்று அகற்றி, பறக்கவைத்து விட்டது. பேராசிரியர் தொப்பியைத் துரத்திக்கொண்டு ஓடினுர். நீண்ட தூரம் ஓடி, தொப்பியை மீட்டார். மீட்ட தொப்பியை ஒரு தாளில் சுற்றி, பத்திரிகாலயம் ஒன்றினுள் சென்று, அங்கு அத்தொப்பியையும் கொடுத்து கீழ்வரும் விளம்பரத்தையும் கொடுத்தார்:

'தெருவில் சென்று கொண்டிருந்தபோது, பேராசிரியர் பாலபனேவ் ஒரு தொப்பியைக் கண்டெடுத்தார். அதை எங்கள் அலுவலகத்திலிருந்து பெற்றுக்கொள்ளலாம்.'

விளம்பரத்திற்கு பணம் கொடுத்துவிட்டு, பேராசிரியர் தொப்பியையும் அங்கே கொடுத்துவிட்டுப் போய்விட்டார். சில தினங்கள் கழித்து, விளம்பரம் வெளியான செய்தித் தாளுடன் பத்திரிகை அலுவலகத்திற்கு வந்து தனது தொப்பியைத் தருமாறு கேட்டார்.




| | | |
|---|---|---|
| ஏடு : 31 | ஒன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1965 |
| இதழ் : 4 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | டிசம்பர் : 19 |

# அயூப் திரும்பினர்

உலக சமாதான நாட்டம் கொண்ட அமெரிக்கத் தலைவருடன், உடன் பிறந்தாருடன் பகைத்துப் பாழாகும் வெறிகொண்டுள்ள பாகிஸ்தான் சர்வாதிகாரி வாஷிங்டனில் பேசிவிட்டு ஊர் திரும்புகிருர்.

இருநாடுகளின் கூட்டறிக்கையில் 'உலக சமாதானமே இருநாடுகளின் நோக்கமென்றும், அமைதியான முறையில் விவகாரங்களைத் தீர்த்துக்கொள்வதே சிறந்த வழியென்றும்' அவ்விருவரின் கூட்டறிக்கை உலகுக்குக் கூறுகிறது.

உயர்ந்த எண்ணங்களையும் கோட்டுபாடுகளையும் வாயளவில் பேசியும், எழுத்தளவில் கையொப்பமிட்டும் அவற்றைப் புறக்கணித்துவிட்டுத் தன் போக்கிலேயே போகும் அநாகரிக வழியைப் பின்பற்றும் அயூப்கான் இந்தக் கூட்டறிக்கையிலும் கையொப்பமிட்டிருப்பதற்கு ஒரு தம்படி மதிப்புக்கூட இருக்காது என்பதை நாம் உணர்ந்திருக்கிறோம். ஆயினும் அமெரிக்காவைப் புறக்கணித்து விட்டுப் போய்விடும் துணிவு எப்படியும் பாகிஸ்தானுக்கு இருக்க முடியாது என்ற ஒரு அடிப்படைச் சூழ்நிலையை வைத்துப் பார்க்கும்போது இந்தச் சந்திப்பின் காரணமாகப் பாகிஸ்தானுக்குத் திகைப்பூண்டு மிதித்தவன் நிலை ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதை ஒருவாறு யூகிக்கலாம்.

பக்கத்து நாடுகளை வாயில் போட்டுக்கொண்டு தனது எல்லையை இந்தப் பூமண்டலம் முழுவதுக்குமாகப் பெருக்கிக்கொள்ளும் சீனவின் பகாசுரப் பசியையும் அதனுடன் குலாவுவதில் உள்ள அரசியல் அநாகரித்தையும் அமெரிக்கா நன்கு விளக்கியிருக்க வேண்டும் என்றே தோன்றுகிறது. உடனே திடீரென்று சீனவுடன் தொடர்பை அறுத்துக்கொள்ள பாகிஸ்தான் அச்சம் கொண்டிருக்கும் உண்மையையும் அமெரிக்கத் தலைவர் புரிந்துகொண்டிருப்பார். அதனுல்தான் பாகிஸ்தான் தனது இன்றைய போக்கிலிருந்து மீண்டு சுதாரித்துக் கொள்ளும் ஒருவாய்ப்புக்கு இடைவெளி தரவேண்டும் என்று எண்ணியே பாகிஸ்தானுடன் இன்னமும் நேசபாவம் காட்டியுள்ளார் என்பதைக் கூட்டறிக்கைக் குறிப்பாக நமக்குக் காட்டுகிறது. எப்படியும் இந்தியாவுடன் பாகிஸ்தான் கொண்டுள்ள பகைமையை அமெரிக்கா ஆதரிக்கவே முடியாதென்பதும் அயூப் கானுக்கு இந்த சந்திப்பு விளக்கியிருக்க வேண்டும். வெளிப்படச் செய்திகளில் விபரம் குறைவாயிருந்த போதிலும் அயூபுக்கு அமெரிக்காவில் பலமான அடி கிடைத்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

திரும்பி வந்த அயூப்கான், தனது ஊடுருவல் தொல்லைகளை மீட்டுக் கொள்வதில் உண்மையான ஆர்வம் காட்டுகிருரா என்பதைப் பொறுத்திருந்துதான் பார்க்கவேண்டும். அப்படி ஒருநல்லெண்ணப் போக்கு அவரிடம் வெளியாளுல் தவிர, ருஷ்ய மத்யஸ்தத்தின் ஆதரவில் டாஷ்கண்டில் பாரத—பாகிஸ்தான் சந்திப்பு எந்தப் பயனையும் தரப் போவதில்லை.

எப்படியும் பாரதம் உலக சமாதானத்தில் கொண்டுள்ள உண்மையான ஆர்வம் வெளிப்பட டாஷ்கண்ட் சந்திப்புப் பெரிதும் பயன்படும் என்று எதிர்பார்க்கலாம்.

— —

## கண்ணேட்டம்

—ரா. நா.

நமது மத்ய அரசின் வெளிநாட்டிலாகாவின் பிரசாரப்பகுதி திருப்திகரமாக பணிபுரியவில்லை எனும் புகாருக்கு வெளிநாட்டிலாகா ராஜ்யமந்திரி திருமதி லட்சுமி மேனன் அளித்த பதில் அதிருப்தியளிக்கக் கூடியது என சென்ற வாரம் குறிப்பிட்டிருந்தேன். நமது பிரசாரப் பகுதியின் பணி எவ்வளவு குறைபாடுகள் நிறைந்தது என்பதைத் தக்க முகாந்தரங்களுடன் விளக்கி பிரியான் நிகோல்ஸ் எனும் பிரிட்டிஷ் பத்திரிகை நிருபர் எழுதியுள்ள கட்டுரையில் முக்கியமான சில பகுதிகளைத் தருகிறேன். நம் குறைகளை நாமே அறிந்து திருத்திக்கொள்ள வேண்டியது அவசியம் என்பதை யாவரும் ஒப்புக்கொள்வார்கள்.

சமீபத்தில் பிரிட்டிஷ் ஒலிபரப்பு நிறுவனத்தின் நிருபர் ஒருவர் தாம் இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் சுற்றுப்பயணம் செய்யப் போவதாக லண்டனிலிலுள்ள இந்தியா, பாகிஸ்தான் இரு ஹைகமிஷனர்களுக்கும் எழுதியிருந்தார். இதற்கு உடனடியாக இந்திய ஹைகமிஷனரிடமிருந்து லண்டனிலும் இந்தியாவிலும் அந்நிருபர் செல்லுமிடங்களிலெல்லாம் அவர் கோரும் உதவிகளை ஆங்காங்குள்ள இந்திய அதிகாரிகள் செய்வர் என பதில் வந்தது.

ஆனுல் பாகிஸ்தான் ஹைகமிஷனரிடமிருந்து நிருபருக்கு தம்முடன் சிற்றுண்டி அருந்துவதற்கு அழைப்பு வந்தது. அந்நிருபர் எங்கெங்கு செல்ல விரும்புகிருர், எதைதைப் பார்க்க ஆசைப்படுகிருர் என பாக் ஹைகமிஷனர் உற்சாகமாக கேள்விக்கணைகள் தொடுத்தார். எந்தெந்த இடங்களில் எம்மாதிரி மக்களை நிருபர் சந்திக்கலாம் என்பதற்கான விவரங்களையும் அளித்தார். இதைப்பற்றி பி. பி. ஸி. நிருபர் குறிப்பிடுகையில் "நான் தொடர்பு கொள்ளும் ஒவ்வொரு தூதரகத்திலும் எனக்கு விருந்தளிக்கப்படும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனுல் நம் பிரயாணத்தில் அக்கரை கொண்டு உதவ முன்வந்தால் அதனுல் ஓரளவு திருப்தி ஏற்படுகிறது' என்று கூறினுர். இப்போது அந்நிருபர் பாகிஸ்தானில் பிரயாணம் செய்து கொண்டிருக்கிருர்.

தமது தூதரகங்கள் ஏராளமான துண்டுப் பிரசுரங்கள் வெளியிடுகின்றன வென்றும் அவைகள் நமது திட்டங்களைப் பற்றிய புள்ளிவிவரங்கள் நிறைந்தனவாயிருக்கின்றனவே இன்றி, இந்தியாவின் பண்பாடு, கலை, கலாசாரம் முதலியன பற்றி விவரமே இல்லை என்று அந்த பிரிட்டிஷ் நிருபர் வருந்துகிருர். மேலும் இந்தியாவிலிருந்து வரும் யாத்திரிகர்களை தூதரக அதி

காரிகள் கவனிப்பதில்லை என்றும் அவர் குறை கூறுகிறார். சமீபத்தில் இங்கிருந்து சென்ற நமது நாட்டிய மணிகள் லண்டன் எடின்பரோ போன்ற பெரிய நகரங்களில் தங்களது கலைத் திறனைக் காட்டுகிறார்களேயன்றி பிரிட்டனில் பல முனிசிபல் சபையினரால் நடத்தப்படும் கலை அரங்கங்களில் ஆடிப்பாடுவதில்லை எனவும் குறிப்பிட்டுள்ளார். இந்த நிலையில் இந்தியாவின் கலைச் சிறப்பைப் பற்றிப் பிற நாட்டு மக்கள் எப்படி அறிந்து கொள்ள முடியும் என்று அவர் கேட்கிறார்.

பெங்களூரில் இந்நிருபர் சில அற்புதமான பொம்மைகள், மரத்திலான உருவச் சிலைகள், காகித பொம்மைகள் முதலியவற்றைப் பார்த்து பிரமித்துப்போனாராம். அந்தத்தொழிலில் ஈடுபட்டிருப்பவர்கள் தங்களது தயாரிப்புகளை வெளிநாடுகளில் விற்பனை செய்ய வேண்டுமென விரும்புகின்றனராம். ஆனால் இம்மாதிரி கைவேலைப்பாடுகள் இருப்பது பிற நாட்டினருக்குத் தெரிந்தால் தானே விற்பனை பெருகும். பிரிட்டனிலும், பிற நாடுகளிலும் இவை போன்ற சரக்குகள் காட்சிப் பொருள்களாகக் காட்டப்பட்டாலல்லவா இவைகளுக்கு கிராக்கி ஏற்படும். மேலும், நமது இசைச் சிறப்பை உலகம் அறிய சிறந்த பாட்டுகளைச் சிறந்த மேதாவிகள் பாடி அவைகள் டேப் ரிகார்டு செய்யப்பட்டு நமது அ. இ. ரே. வெளிநாடுகளுககு அனுப்பி நம் கலைச் சிறப்பை உலகம் அறியச்செய்ய வேண்டாமா?

இந் நிருபரின் கட்டுரையை நமது வெளி நாட்டு இலாகாவும், அ. இ. ரே. அமைச்சரகமும் நன்கு படித்து நம் புகழ் உலகெங்கும் ஓங்கச் செய்ய வேண்டும்.

— —

# பசுவும் பாலும்

சுத்தப்பால் ஆரோக்ய மானது என்பது மட்டும் அல்லாமல் விரைவில் கெட்டுப்போகாமலும் இருக்கும்.

கிராமங்களில் வசதிகள் இல்லை என்றால் கூட நீங்கள் பாலை தூய்மையாக உற்பத்தி செய்ய வழிகள் உண்டு.

மாடுகளை ஆரோக்கியமாக வைத்துக் கொள்ளுங்கள். தொற்றுநோயால் பீடிக்கப்பட்ட மாடுகளின் பால் நல்லதல்ல. ஒரு மாட்டுக்கு நோய் வந்தாலும் இதரமாடுகளுக்கும் அது விரைவில் பரவி விடும். ஆகையால் உள்ளூர் கால் நடை வைத்தியரைக் கொண்டு மாடுகளைப் பரிசோதியுங்கள். சகதியில் மாடுகளை விடாதீர்கள், கட்டி வைக்காதீர்கள். மடி அழுக்காகிப் பால் கெடாமல் இருக்க இந்த எச்சரிக்கை அவசியம்.

கறப்பதற்கு முன் மாட்டை பிரஷ்ஷால் தேய்த்துச் சுத்தப்படுத்துங்கள். கறப்பதற்கு முன் மடி வெகு சுத்தமாக இருக்க வேண்டும். கறப்பதற்கு முன் சுடும் க்ளோரீன் திரவத்தில் துணியை நனைத்துமடியைச் சுத்தம் செய்யவும். 10,00,000க்கு 200 பாகம் மருந்தை கலந்து க்ளோரின் திரவம் தயாரிக்கலாம். ஐந்து மாடுகளுக்கு இரண்டு லிட்டர் திரவம் போதும். மடியைச் சுற்றி ரோமம் இல்லாமல் அகற்றவும்.

சுத்த பாத்திரங்களில் பாலைக் கறக்க வேண்டும். நசுங்கின அல்ல துருப்பிடித்த பாத்திரங்களைப் பயன்படுத்தக் கூடாது. செவ்வையாக ஈயம் பூசிய பாத்திரங்களைப் பயன்படுத்துவது சிறந்தது. வீட்டில் சமையல் அறையில் பாத்திரங்களோடு பால் கறக்கும் பாத்திரங்களைவைக்கவேண்டாம். தினந்தோறும் பாத்திரத்தை முதலில் சுத்த நீரால் கழுவி, பிறகு வெதவெதப்பான காரக்கரைசலில் கழுவி, மேலும் வெண்ணீரால் அலம்பி, குளோரீன் திரவத்தால் சுத்தம் செய்து, தலைகீழாக தனிப்பட கவிழ்த்து வைத்து உலர்த்த வேண்டும்.

நகரங்களில் உள்ள பால் விற்பனைப் பண்ணைகளுக்கோ, பால்பண்டம் தயாரிக்கும் பாக்டரிகளுக்கோ நீங்கள் பால்சப்ளை செய்தால் பாத்திரங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ள ஆலோசனைகளை முதலாளிகள் சொல்வார்கள்.

சாம்பல், மிருதுவானமண் இவைகளால் தேய்த்துபால் சுமந்து செல்லும் பாத்திரங்களை சுத்தம் செய்து சுத்த நீரில் கழுவலாம். கழுவிய பிறகு கவிழ்த்துக் காய வைக்கவும்.

கறப்பதற்கு முன்னால் கொட்டில் தரையை தண்ணீர் தெளித்துச் சுத்தம் செய்யவும், அடிக்கடி டி. டி. டி. அடிக்கவும், கறந்த பாலை மூடிவைக்கவும். ஈக்கள் பாலில் விழுவதை இவ்வாறு தடுக்கலாம்.

பால் கறப்பவர் ஜலதோஷம், இருமல், சொரி இவைகளால் பாதிக்கப்பட்டிருக்கக் கூடாது. கறப்பதற்கு முன்னால் கையைக் கழுவி துடைத்துக்கொள்ள வேண்டும். ஈரக் கையால் கறக்கக் கூடாது. நகத்தை வெட்டி விரல்கள் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். பால்கறக்கையில் சுத்தமான ஆடை அணிந்து கொள்ள வேண்டும்.

முதலில் ஒவ்வொரு காம்பிலிருந்து ஒரு பீச்சு ஒரு தனிக் கோப்பையில் கறந்து விடவும். இம்முன் கறப்பில் பூச்சிகள் இருக்கும். இதை இதரப்பாலுடன் கலக்கக் கூடாது.

சுத்தப்பால் உற்பத்தி செய்ய கீழ்க்கண்டவைகளை நினைவில் இறுத்திக்கொள்ளவும்; ஆரோக்கியமான மாடுகள் தான் சுத்தமான பால் தரும். மாட்டையும், பால் பாத்திரங்களையும், மடியையும். கையையும் கழுவ சுத்தமான தண்ணீரைப் பயன்படுத்தவும். கொட்டிலை எப்போதும் சுத்தமாக வைத்துக் கொள்ளவும், கறப்பதற்கு முன் மாட்டையும், மடியையும் சுத்தம் செய்யவும். கறப்பவர் ஆரோக்கியமாக இருக்க வேண்டும். கறப்பதற்கு முன் கையைக் கழுவவேண்டும்; கறந்த பாலை வடிக்கட்டிவைக்க வேண்டும்; பாலை மூடிவைக்க வேண்டும். ●



கறக்கும்முன் மடியை சுத்தம் செய்யவும்

# சைனாவின் மாசேதுங்

ஏ. ஆர். ராஜாமணி

கம்யூனிஸ்ட் சைனாவின் ஏகபோகத் தலைவரான தோழர் மாஸேதுங், நம்முடைய காலத்தில் அலக்ஷியப்படுத்த முடியாத அரசியல் தலைவராகவும், மனித சமுதாயத்தின் மேன்மைகளுக்கு உறுதி அளிக்கக் கூடிய 'வல்லவர்களில்' ஒருவராகவும் உலக அரங்கில் கணிக்கப்படுகிறார்.

உலக அரசியலை, முழுக்க முழுக்க கம்யூனிஸச் சித்தாந்தங்களால் 'புனித'ப் படுத்தத்திட்டமிட்டு, அதற்கேற்ப, நாட்டுக்கு நாடு, சூழ்நிலைக்கொப்ப பலவேறு 'முகமூடி'களின் மூலம், தன்னுடைய சித்தாந்த வெற்றிகளுக்கு உழைத்து வரும் தோழர் மாஸேதுங், சைனாவை, எந்த அளவிற்கு அபிவிருத்திக்கு உள்ளாகி இருக்கிறார் என்பது கேள்வி!

'ரத்தம் சிந்தாதப் புரட்சிகளின் மூலம், ஆக்கபூர்வமான அபிலாஷைகளை ஒருபோதும் நிறைவேற்றிக் கொள்ள முடியாது!' என்று முழங்கும் மாஸேதுங், சைனாவின் பண்பட்ட, பழம் பெரும் கலாசாரப் பெருமைகளைக் கேலிக்குரியவைகளாக ஆக்கியது மட்டுமின்றி, இந்த இருபதாம் நூற்றாண்டின் மனித மனப்போக்கின் தத்துவத்தைப் புரிந்துகொள்ளத் திராணியற்றவனாகவும் காட்சிதருகிறார்! காலஞ்சென்ற சர்வாதிகாரி, மார்ஷல் ஸ்டாலினைப் போல், கொடுங்கோலனாக, அரசியல் அரக்கனாக, இன்றைய சர்வதேச அரசியல் விவகாரங்களில் அடிபடும் மாஸேதுங்கின் பெயர், உலக சரித்திர வரலாற்றில் ஒரு களங்கமாகவே இருக்கும்.

'தனிமனித வழிபாட்டுக்கு' ஸ்டாலின் 'உரிய தெய்வமாக', இரும்புத்திரை நாடுகளில், அவரது நாளில் இருந்தது போல், தற்சமயம் தோழர் மாஸேதுங் உலகநாடுகளின் புரட்சிக் கடவுளாகத்தான் தொழப்படவேண்டுமென விரும்புகிறார்! ஆனால், விஞ்ஞான சந்தைகளும், மனித நாகரீகமும் கணத்திற்கு கணம் முன்னேறி வரும் இன்றையச் சூழலில், தோழர் மாஸேதுங்கின் திட்டமும், கனவுகளும் வெறும் பிரமையாகவே முடியும் என்பது தெளிவு.

பாரிஸிலுள்ள, அரசியல் விஞ்ஞானக் கழகத்தின் சர்வதேச உறவுத்துறை அதிகாரியான டாக்டர் ச்ராம் சமீபத்தில் எழுதியுள்ள கட்டுரையொன்றில், மாஸேதுங்கின் தீய்ந்த அரசியல் உள்ளுணர்ச்சிகளை வெகுதுல்லியமாக எடுத்துக் காட்டியிருக்கிறார்.

காரல்மார்க்ஸ், லெனின் சித்தாந்தங்களுக்கு நேர் வாரிசாகத் தன்னைப் பிரகடனப்படுத்திக்கொண்டு, உலகெங்கிலும் தொழிற் புரட்சிகளின் மூலம் புத்தம் புதியதொரு நலனை மானிட சாதியும், சமுதாயமும் நிறுவப்படுவதற்குத் தன்னை அர்ப்பணித்துக்கொண்டிருப்பதாக பறைசாற்றும் தோழர் மாஸேதுங், மிகப் பெரிய தவறொன்றைச் செய்தவராகிறார். ஐரோப்பியரல்லாத மேற்கு நாடுகளில், கணிசமான அளவு இடம்பெற்றிருந்த முடியரசுகளையும், முதலாளித்துவத்தையும் தகர்ப்பதற்கு, அன்றையகால கட்டத்தில், ஒரு புதிய நோக்கும், வழிமுறைகளும் தேவைப்பட்டன. இந்த சமயத்தில் தான், ஜார் மன்னனின் காட்டுமிராண்டித்தனமான அரசாட்சியை வேரோடு கெல்லி எறிய புரட்சிவீரர் லெனின் தோன்றினார்.

அவரது தலைமையில் போல்ஷ்விக்குகள் வெற்றியடைந்து, மானிட நீதிக்கு விளக்கம் தரும் வகையில், எந்தக் காலத்திற்கும் ஏற்பான வகையில் சமதர்ம ஆட்சிக்கு வேண்டிய சாரங்களை வகுத்தார்கள். தத்துவச் சிறப்பின் காரணமாக, லெனின் உலக மக்களின் இதயத்தில், என்றும் வாழ்விற்கு உரியவராக வழிபாட்டுக்குள்ளானார். அது இயற்கை என்பதோடு, ஏற்பானதுங்கூட!

ஆனால், தோழர் மாஸேதுங், 'கானமயிலாட, கண்டிருந்த வான்கோழி போல்' லெனினது கோட்பாடுகளை விட்டுவிட்டு, அவர் நடத்திய புரட்சியை மட்டும் நினைத்துக்கொண்டு, கால வேகத்தின் சக்திக்கும் உணர்ச்சிகளுக்கும் மதிப்பளிக்கத்தெரியாமல், வளர்ச்சிக்கும் புரட்சியே வழி! என்று இன்றளவும் பிதற்றிக் கொண்டு வருவது மகா பேதைமை! இதாலியின் முரட்டு மனிதன் முஸோலினியைப் போல், ஆட்சிலகானை இறுகப்பிடித்துக்கொண்டு சைனாவின் ஆன்மீக உள்ளுணர்வுகளுக்குப் பொருந்தாத வகையில் எல்லா முனைகளிலும் தன்னுடைய நாட்டு மக்களின் கலாச்சார உணர்ச்சிகளைக் காயடித்து, அவர்களை வெறும் யந்திரப் புரட்சிவீரர்களாக மாற்றுவதில் துடிப்புள்ளவராக விளங்கும் மாஸேதுங், இத்தகைய தன்னுடைய திட்டங்களின் மூலம் எந்த வகையிலும் சைனாவை, உலக அரங்கில் உயர்த்திவிட முடியாது என்பதை உணரும் காலம் வெகுதொலைவில் இல்லை!

சமீபகாலம் வரை, பிரிட்டனின் ஏகாதிபத்தியச் செங்கோல், ஆசியா கண்டத்தின் கணிசமான பெரும் பகுதியை ஆண்டு வந்தது. அந்த சாகஸ மதர்ப்பில், சூரியன் அஸ்தமிக்காத அரசாக, பிரிட்டன் தன்னை வியந்துகொண்ட நாளும், நினைவுகளும் இன்று அடியோடு மண் மூடிப்போய் விட்டிருப்பது வெளிப்படை. அதன் செங்கோலுக்குள், பல மதச் சந்தர்ப்பக் கோளாறுகளினால் சிக்கிக் கொண்டிருந்த பாரதம் உள்ளிட்ட பெரும்பாலான ஆசிய நாடுகளும், வேறு பல உலக நாடுகளும் இன்று தன்னிகரற்ற குடியரசு நாடுகளாக, பொருளாதாரச் செழுமையோடு, உலக அரங்கில் புதியதொரு சரித்திரப் பாரம்பரியத்திற்கு அளப்பரிய சேவை செய்து வருகின்றன!

பிரிட்டன் எப்படி தனது அகட விகட ராஜீயத் தந்திரங்களினால், இன்றைய அரசியல் அரங்கில் வெற்றியடைய முடியவில்லையோ, அதேபோல், தோழர் மாஸேதுங்கின் "முகமூடி அரசியலும்" மண்ணைக் கவ்வப்போது உறுதி!

'உலகமெனும் நந்தவனத்தில் ஆயிரமாயிரம் புதுமலர்கள் பூக்கட்டும்!' என்று ஒரு காலத்தில் கவர்ச்சித் தத்துவம் பேசிய அதே மாஸேதுங், இன்று ரஷ்யா, யூகோஸ்லோவியாபோன்ற பெரும் சகாக்களுடன் சித்தாந்த முரண்பாடு கொண்டு அல்பேனியா போன்ற சுண்டைக்காய் அளவு பெறுமானமுள்ள நாட்டின் அற்பத்தனமான பிதற்றல்களை மட்டுமே துணையாகக் கொண்டு, சித்தாந்தப் புரட்சியில் தொடர்ந்து ஈடுபட்டுள்ளதை நினைத்தால், நமக்கு நம்முடைய தோழர்களின் மீதுதான் எரிச்சல் வருகிறது!

பாகிஸ்தானில் ஒரு பூட்டோ! பாரதத்தில் ஒரு நம்பூத்ரிபட்டோ. இவ்வாறு தனக்கு விசுவாசமுள்ள குழாம் உலக நாடுகள் ஒவ்வொன்றிலும், சிறிய அளவி

[ 9-ம் பக்கம் பார்க்க ]

# அன்னை குரல் கேட்குது

மாணவன்

அன்னை குரல் கேட்குது
அன்னை குரல் கேட்குது—அது
விண்ணில் மோதி திரும்பும்போது
வெற்றிக் குரலாய் கேட்குது

அன்னை குரல் கேட்குது
அன்னை குரல் கேட்குது—அது
தன்னை மறந்து பகைத்தவர்க்கு
தர்மக் கூற்ருய் கேட்குது

பாதை மாறி போனவர்க்கு
பயணம் முடியும் தோல்வியாய்
பண்பை மறந்து பகைத்தவர்க்கு
பலனும் தெரியும் தோல்வியாய்—என (அன்னை)

ஆலயத்து மணிகளாய்
அறிவகத்து சுடர்களாய்
நானை உலகை வாழவைக்கும்
மாணவரின் சேவை வேண்டி— (அன்னை)

[ வேறு ]

பள்ளிசெல்லும் நேரம்போக மீதிநேரத்தில்-நாட்டை
பாதுகாக்கும் சேவையிலே முன்னுலிருப்போம்
செல்லமாக எண்ணி பெற்ருேர் கொடுக்கும் பணத்தில்
சிலவுகளைக் குறைத்து யுத்தநிதியும் திரட்டுவோம்.

எல்லையிலே மானங்காக்கும் வீரரின் குடும்பம்
இல்லையென்றே வருந்திடாமல் உதவிகள் செய்வோம்
மெல்ல மெல்ல எதிரி கிளப்பும் வதந்திகள் நாட்டில்
கள்ளத்தனமாய் நுழையுமுன்னே தடுத்து நிறுத்துவோம்

நல்லஉடல் நல்லஉள்ளம் கொண்ட வீரர்கள்
நலனுக்காக இரத்தம் வேண்டின் உடனே உதவுவோம்
நம்மை நம்பியே நாடிருக்கு என்பதை எண்ணி
நாளும் பொழுதும் நாட்டைக்காக்க முன்னுலிருப்போம்.

மானங்காக்கும் நிலையினிலே நாமும் இருப்பதால்-நாட்டின்
மானங்காக்கும் நிலையினிலே நாமும் இருப்பதால்
மானம், அவன் கைகளிலே என்றே பொருள்பட-நம்மை
மானம் அவன் 'மாணவன்' என்றே சொன்னுரோ ?

வீணே நாளைக் கழித்து இங்கே வாழ்வதும் பாவம்
விடிவிளக்காய் நாட்டைக்காக்க வழியும் காட்டுவோம்.
இன்று போனுல் நாளை நாமும் நாட்டில் ஒருவர்—ஆதலின்
ஒன்றேசெய்வோம் நன்றேசெய்வோம் இன்றேசெய்வோம்
என்றுமில்லாப் பெரும்புகழை நாட்டின் ஏட்டினிலே
எழுதிடவே நாட்டிற்காக உயிரையும் கொடுப்போம்.

— திருச்சி கமலமணி

# தங்கம் வசூல்

கரூர் பரமத்தி பஞ்சாயத்து யூனியன் வட்டாரத்தில் தங்கப் பத்திரத்திற்காக, சுமார் 1500 கிராமுக்கு மேல் தங்கம் முதலீடு செய்யப்பட்டது. திருச்சி மாவட்ட கலெக்டர் ஸ்ரீ கே. சொக்கலிங்கம் விழாவிற்குத் தலைமை வகித்தார்.

அவர் பேசுகையில், ஆரம்பத்திலேயே திருச்சி ஜில்லாவில் 7500 கிராம் தங்கம் அளித்ததை முதன் மந்திரியே பாராட்டியதாகவும் குறிப்பிட்டார். திருச்சி ஜில்லாவில் தங்கம் அளித்தவர்கள் அதிகம் என்பது மட்டுமல்ல ; தங்கமான மனது படைத்தவர்களும் அதிகம் என்பதை ஜில்லாவில் நடைபெற்ற தங்க முதலீட்டு நிகழ்ச்சிகள் நிரூபிப்பதாகவும் சொன்னுர். இதுவரை 50,000 கிராம் தங்கம் திருச்சி மாவட்டத்தில் சேர்ந்திருக்கிறது என்பதனையும் எடுத்துக் காட்டினுர்.

திருச்சி ஜில்லாவில் விவசாய உற்பத்தியைப் பெருக்குவதில் கரூர் விவசாயிகள் முதன்மை வகிப்பதாக ஜில்லா கலெக்டர் ஸ்ரீ கே. சொக்கலிங்கம் தெரிவித்தார். க. பரமத்தி யூனியன் சார்பாக யூனியன் அலுவலகத்தில் நடந்த பொதுக் கூட்டத்தில் கலெக்டர் இதனைச் சொன்னுர்.

"இங்குள்ள விவசாயிகளிடமிருந்து பாடங் கற்றுக்கொள்ள நான் லால்குடியிலிருந்து 10 விவசாயிகளை அனுப்பினேன். அவர்கள் கரூர் பிரதேசத்தைச் சார்ந்த புகளூரில் 10 நாட்கள் தங்கி விவசாயிகள் பயிரிடும் விதத்தை நேரில் கண்டார்கள். இதன்மூலம் இங்குள்ள விவசாயிகள் பயிரிடும் முற்போக்கான நிலைமையை அவர்கள் அறிய முடிந்தது!" என்று கூறினுர்.

# பட்டாணிக்குப் பயந்து பேய் ஓட்டம்!

மேற்கு ஜெர்மனியில் கிருஸ்துமஸ் விழாவைக் கொண்டாட நவம்பர் இறுதியிலிருந்தே ஏற்பாடுகள் மும்மரமாக நடந்து வருகின்றன. இயேசுநாதரின் வருகையைக் குறிக்கும் வயில், நவம்பர் 28 முதல் ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைக்கும் ஒரு மெழுகுவர்த்தி வீதம் 4 மெழுவர்த்திகளுக்கும் சிகப்பு ரிப்பன்கள் கட்டப்பட்டு, வீட்டின் உத்திரத்தில் அல்லது மேஜையின் மீது ஒரு தட்டு வைக்கப்படுவதுண்டு. இதைக் கண்டால், குழந்தைகளுக்கு ஒரே வியப்பு; ஆனந்தம்! கிராமப்புறங்களில் மாயக்காரிகள் போலவும், பேய்கள் போலவும் சிலர் வேடம் தரித்துக் கொண்டு, தெருக்கள் வழியே சென்று ஜன்னல்களின் மீது பட்டாணிகளை விட்டெறிவது வழக்கம். இது, பேய் பிசாசுகளிலிருந்து கிராமத்தைப் பாதுகாக்கும் என்று அந்தக்கால மக்கள் நம்பினுர்கள். இப்பழக்கம் இன்னும் மறையவில்லை. ஆனுல் இப்போது இப்பழக்கம், இளைஞர்களுக்கும் முதியோர்களுக்கும் வேடிக்கையாகப்படுகிறது.

[யூ. பி. எஸ்.]

[8-ம் பக்கத் தொடர்ச்சி]

லாவது இருப்பதினுல் தானே, தோழர் மாஸேதுங்கின் ஜீவசத்து குன்ருமலிருக்கிறது!

எழுபது ஆண்டு பிராயமுள்ள மாட்சிமை தங்கிய மாபெரும் தோழர் மாஸேதுங்கின் இந்த மகிழ்ச்சியும், நம்பிக்கையும் அடுத்து வரும் ஒருசில ஆண்டுகளில் சாரமற்றுப் போகப்போவதை, சூசகமாகத் தெரிவிக்கும் அரசியல் சடங்குகள், சூடுபிடிக்க ஆரம்பித்து விட்டன! இதைத் தொடர்ந்து, விசேஷ அதிர்ச்சி வைத்தியங்களுக்கு 'தோழர்கள்' எல்லா நாடுகளிலும் தற்போது உள்ளாகியிருப்பது தெளிவு. மாஸேதுங்கின் 'அல்நாஷர்' கனவுகளை முறியடிப்பதே இந்த நடவடிக்கைகளின் நோக்கமாகும்.

# கைத்தறிப் பிரச்னை

திருச்சிராப்பள்ளி ஜில்லா கைத்தறி ஜவுளி உற்பத்தியாளர் சங்கத்தின் மகா சபைக் கூட்டம் 12-12-65 ஞாயிற்றுக் கிழமை காலை திருச்சி வாத்தலை மேல் அணைக்கட்டு பிரயாண விடுதியில் தலைவர் திரு ஏ. எஸ். லிங்கையன் செட்டியார் தலைமையில் நடைபெற்றது.

இறை வணக்கத்திற்கு பின் சங்க உப தலைவர் திரு ஏ. ராமலிங்கம் செட்டியார் அவர்கள் எல்லோரையும் வரவேற்றுப்பேசினார். தலைவர் திரு ஏ. எஸ். லிங்கையன் செட்டியார் அவர்கள் விசேஷ சொற்பொழிவற்றினார்.

குறிப்பாக தற்காலத்தில் கைத்தறி ஜவுளிகள் அதிகமாகத்தேங்கியிருக்கின்றன. காரணம் மில்களிலே நைலான், நைலக்ஸ் போன்ற மெல்லிய ரகங்கள் அதிகமாக உற்பத்தி செய்யப்படுகிறதினால் நமதுகைத்தறி ஜவுளிகள் மிகுதியாக தேக்கமுற்று அதை நம்பி வாழும் உற்பத்தியாளர்களும் கைத்தறி நெசவாளர்களும் கஷ்டத்திற்குள்ளாகிறார்கள். மேலும் மில்களிலே 36 இஞ்சுக்கு மேலுள்ள கரைபோட்ட வேஷ்டிகள் தயார் செய்து கொண்டே போனால் கைத்தறி நெசவில் ஈடுபட்டுள்ள பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் எல்லாம் பட்டினி கிடந்து கஷ்டப்பட வேண்டியதாய் இருக்குமென்பதில் ஐயமில்லை. ஆகையால் அரசாங்கத்தார் கைத்தறிகளுக்கு வேண்டிய சலுகைகள் கொடுத்து மில்களை கட்டுப்படுத்தக் கேட்டுக்கொண்டார். மேலும் கைத்தறி வியாபாரிகள் மில்களின் எதிர்ப்பைச் சமாளிக்க வேண்டுமென்றால் கைத்தறி வேஷ்டிகள் புடவைகள் நூதனமான முறையில் சாய உத்திரவாதத்துடன் நவீன கலர்களில் சரியான அகலத்துடன் ஜனங்கள் திருப்தி அளவிற்கு உற்பத்தி செய்ய வேண்டுமாய் கேட்டுக் கொண்டார்.

பின்பு சங்கத்தின் காரியதரிசி திரு பி. சீனிவாசன் செட்டியார் அவர்கள் ஆண்டு அறிக்கையை வாசித்து வரவு சிலவு கணக்குகள் சமர்ப்பித்தார். திரு வி. கஸ்தூரி அவர்களால் கீழ்க்கண்டவர்கள் 1965-66, 1966-67 ஆண்டுகளுக்கு நிர்வாகசபை அங்கத்தினர்களாக பிரேரிக்கப்பட்டு தீர்மானம் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது. ஏ. லிங்கையன் செட்டியார்-தலைவர், ஏ. ராமலிங்கம் செட்டியார் – உபதலைவர், பி. சீனிவாசன் செட்டியார்-காரியதரிசி, எஸ். நடராஜன்-உதவி காரியதரிசி, ஆர். ஜானகிராம், எம். வேதய்யா, ஏ. ராமசாமி, பி. எம். வேலாசாமி செட்டியார், டி. கோவிந்தசாமி செட்டியார்-நிர்வாகசபை அங்கத்தினர்கள்.

நிர்வாகசபையைப்பாராட்டியும் தற்காலத்தில் கைத்தறி ஜவுளிகள் தேங்கியிருப்பதை முன்னிட்டு கைத்தறி ஜவுளிக்கு வேண்டிய சலுகைகள் கொடுக்கவேண்டுமாயும் அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொண்டு திரு டி. கோவிந்தசாமி அவர்களும் திரு ஆர். ஜானகிராம் அவர்களும் மற்றும் பிரமுகர்களும் சிறந்த சொற்பொழிவாற்றினார்கள்.

இறுதியில் உதவி காரியதரிசி எஸ். நடராஜன் அவர்கள், எல்லோருக்கும் நன்றி தெரிவித்துக்கொண்டு வந்தனோபசாரத்துடன் கூட்டம் இனிது முடிந்தது.

——



[ 3-ம் பக்கத் தொடர்ச்சி ]

இருவேறு அம்சங்களான—தூண்டுதல், உள்ளடக்குதல்-ஆகியவற்றின் பரஸ்பர நிகழ்ச்சியே, உயர் நரம்பு மண்டலச் செயல். தூண்டுதல் உணர்வு-அது புறத்தூண்டலாயினும், அகத்தூண்டலாயினும் – தோல், கண், காது போன்ற உணர்ச்சி நரம்பு முடிச்சுக்களிலிருந்து, செய்தி நரம்புகளின் மூலம், மத்திய நரம்பு மண்டலத்திற்குச் செல்கின்றன. தூண்டுதல் உணர்வைப் பெறாத நரம்புகள், உள்ளடக்கு நிலையில் உள்ளன. உள்ளடக்குதல் உணர்வையும், பயிற்சியினால் தூண்ட முடியும் என்பதே பாவ்லோவின் ஆராய்ச்சி முடிவாகும்.

மகப்பேற்றிற்காக ஒரு தாயைத் தயாரிக்கும் போது, உள்ளடக்குதல் உணர்வை அவளது கார்டெக்ஸ் பகுதி தூண்டுதலுக்குப் பயிற்சியளித்தல் அவசியம். இதற்கு அவளிடம் கூறும் வார்த்தைகள் பெரிதும் உதவுகின்றன. 'மகப்பேறு என்பது ஒரு சாதாரண உடலியக்க செயலே. நான்சரிவர, சில உத்திகளைக் கடைப்பிடித்தால், பிரசவத்தின்போது வலியே ஏற்படுவதில்லை' என்ற உணர்வு, ஒரு தாய்க்கு ஆழமாகப் பதிய வேண்டும். குழந்தை பிறக்கும் அந்த நிகழ்ச்சி முழுவதையும், ஒரு தாய் எவ்வளவு சிறந்த முறையில் முன் கூட்டியே புரிந்து கொள்கிறாளோ, அவ்வளவுக்கவ்வளவு வலியில்லாப் பிரசவத்தில் அவளுக்கு வெற்றி கிடைக்கும்.

இப்பயிற்சிகளைச் சரிவரப் பெற்ற தாய்மார்கள் மகப்பேற்றின் போது, வலியை உணர்வதே இல்லை; அப்படி வலி ஏற்படினும், அது அவ்வளவு தீவிரமாக இருப்பதில்லை. மேலும், இப்பயிற்சி பெற்ற தாய்மார்களுக்குப் பிரசவ காலமும் மிகக் குறுகியதாகவே உள்ளது. பிரசவத்தின் பின்னர் ஏற்படும் இரத்த ஒழுக்கும் மிகக் குறைவாகவே உள்ளது. எந்தவிதமான சிக்கலும் ஏற்படுவதே இல்லை.

பிரசவம் சற்று கடினமாக இருக்கும் என்று எதிர்பார்க்கப் பட்டால், மருத்துவமனைகளில், வலி நீக்கத்திற்கு சில மருந்துகளும் கொடுக்கப்படுகின்றன. அம்மருந்துகளும் ஒரேயொரு முறைதான் கொடுக்கப்படும் ஆதலால், எவ்வித ஆபத்தையும் விளைவிப்பதில்லை.

தங்களது சொந்த அனுபவத்தின் வாயிலாக, பல லட்சம் பெண்கள், பிரசவம் என்பது ஒரு வேதனையளிக்கும் கட்டம் அன்று, இயற்கையான ஒரு உடலியல் நிகழ்ச்சியே என்பதை நன்கு தெரிந்து கொண்டனர். இவ்வேதனை பிரச்சினை, அதிவிரைவில் பூரணமாகத் தீர்க்கப்படும் என்பதில் எவ்வித ஐயமுமில்லை.

[2-ம பக்கத் தொடர்ச்சி]

தான்-இந்தக் கேள்வி-பதில் மூலம் உணர்த்தப்பட்ட தத்துவ விளக்கமாக மலர்ந்த 'சிறுகதை'க்கும் புகழுண்டு.

இன்று-உண்மையிலேயே -வளர்ந்து விட்ட - வளர்ந்து வரும் - சிறுகதை இலக்கியம் பற்றிய விமர்சனக் கட்டுரைத்தொடரை திரு. எம். எஸ். ராஜகோபாலன் துவக்கியிருக்கிறார்.

*

'கற்ற கல்விக்கு நாம் அடிமையானால் அது தக்க சமயத்தில் பயன் தராது. நாம் கற்ற கல்வி நமக்குத் தொண்டுபுரிய வேண்டும்' எனும் ஆழ்ந்த - அனுபவ - உரையை 'பழகும் இன்பத்' தால் இரா. இராதாகிருஷ்ணன் அவர்கள் வழங்குகிறார்.

*

'பணம்பண்ணுகிற புத்தி' மனிதனைப் பண்பிழக்கச் செய்வதையும் 'நிறைந்த மனம்' படைத்தவர்களால் அவன் திருந்த வழியுண்டு என்பதையும் பட்டுக்கோட்டை குமாரவேலு தமது ஓற்றையங்கத் தமிழ் நாடகத்தில் சொல்லாமல் சொல்கிறார். ஆமாம்; தமிழில் நாடகமேயில்லை என்று யாரோ சொன்னாற்போல் செவியில் விழுந்ததே!

*

தீர்க்கதரிசி என்று புகழ் பெற்ற பாரதி, பாகிஸ்தான் படையெடுப்பை எதிர் பார்த்து முன்பே எழுதி வைத்தாரோ'-என்று எண்ணும் வகையில் அமைந்த 'கோடிமண்டபம் திகழும்' என்று தொடங்கும் பாடலுக்கு விளக்கமாகக் கவிஞர் அரங்க - சீனிவாசன் சிறுகதையொன்றே எழுதியுள்ளார்.

*

பொதுவாக எழுத்தாளன் சிறப்பு மலரில் என்னால் எடைபோட முடியாத நல்ல கவிதைகளும் - ஆங்கிலக் கட்டுரைகளும் - குழந்தை இலக்கியப் பகுதியில் 'அப்பாவின் ஆசை'யை நிறைவேற்றிப் புகழ் பெற்ற திருச்சி பாரதனின் அருமையான தொகுப்பும் - பஞ்ச பாண்டவர்களோடு நம் பாரதத் தலைவர்களைக் குறிப்பிட்டு விளக்கந்தரும் ஆசிரியரின் குறிப்புக்களும் யாவும் சிறப்புக்குரிய அம்சங்களாகத் திகழ்கின்றன,

ஒரு சில குறிப்புக்களைக் கொடுத்து இக்கட்டுரையைத்தொடர்ந்து பிரசுரித்த 'சிவாஜிக்கு' என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

— அன்பன் பரதேசி.

நான் இறந்த பிறகு, எனக்காக, எந்த மதச் சடங்குகள் செய்வதையும் நான் விரும்பவில்லை. காரணம் அவைகளில் எனக்கு நம்பிக்கையில்லை. வெறும் சம்பிரதாயத்துக்காக அதற்கு உடன்படுவதும் வேஷம். அது நம்மையும் அதோடு மற்றவர்களையும் ஏமாற்றும் முயற்சியாகும்.

— மறைந்த மாணிக்கம், பண்டித ஜவஹர்லால் நேரு.

குறிப்பு :— நேரு அவர்களின் பிறந்தநாளையொட்டி 14—11—65ல் 'அலைகள்' 'நாத்திகம்' 'தமிழ்ச் செய்தி' ஆகிய பத்திரிகைகள் சிறப்பு மலர் வெளியிட்டுள்ளன.

*

பொதுவாக மனிதப்பிறவி எடுத்து விட்ட யாரிடத்திலும் சில குறைபாடுகள் இருக்கத்தான் செய்யும். அந்தக் குறைபாடுகளை வரிசைப்படுத்தி வைப்பதிலோ தொட்டுத் தொட்டுக் காட்டுவதிலோ என்னுடைய எழுதுகோல் மகிழ்ச்சி கொள்வதில்லை.

— வெ. சாமிநாதசர்மா

*

உங்கள் சிந்தனை தெளிவுடையதாகவும் நடுவு நிலைமை உடையதாகவும் இருக்குமானால் தனியுடைமைக்கு ஒரு முடிவு கட்டும் படியாகக் கவிதை செய்யுங்கள். இலக்கியங்களைப் படையுங்கள். வழி செய்யுங்கள் - ஒரு நாடு, ஓரரசு என்ற திசை நோக்கிச் சிந்தனை செய்யுங்கள், மக்களையும் அழைத்துச் செல்லுங்கள். இல்லையானால் எழுதுகோலைக் கீழே போட்டு விட்டுத் துப்பாக்கியைத் தூக்குங்கள். எழுத்துக்களால் சாதிக்க முடியாததைப் போர் முனையிலாவது சாதித்துவிட்டுப் புதியதோர் அத்தியாயத்தைத் தொடங்கலாம்!

— 'பூங்குன்றனர்'

## தங்கப்பத்திரம்

திருச்சி திருவெறும்பூர் பஞ்சாயத்து யூனியன் சார்பில் நடந்த ஒரு விழாவில் வீரர்கள் க்ஷேமநல கமிட்டித் தலைவர் ஸ்ரீமதி பத்மா சொக்கலிங்கத்திடம் தங்கப் பத்திரத்தில் முதலீடு செய்வதற்காக சுமார் 1451 கிராம் தங்கம் கொடுக்கப் பட்டது.

## கைவினைத் தொழில்

திருச்சி ஜில்லா கைவினை தொழில் ஆசிரியர்கள் சங்கம் ஞாயிறன்று கூடி ஹைஸ்கூல்களிலுள்ள கைவினைத் தொழில் ஆசிரியர்களை முழுநேர ஆசிரியர்களாக நடத்துமாறு சர்க்காரை வேண்டிகொண்டது.

பின்னர் திருச்சி ஜில்லா கல்வி அதிகாரியின் உதவியாளர் ஸ்ரீ எம். வெங்கட்ராமன் தலைமையில் விசேஷக்கூட்டம் நடந்தது.

நேஷனல் ஹைஸ்கூல் தலைமை ஆசிரியர் ஸ்ரீ ஆர். பூவராகன், ஸ்ரீ என். கே. வேணுகோபாலன் இருவரும்பேசினர். ரூ. 101 பெறுமான துண்டுகளை ஜவான்களுக்கு உதவுவதென தீர்மானிக்கப்பட்டது.

# திருவரங்கம் திருப்பணி

திருவரங்கம் பெரிய கோயில் திருப்பணிக்கு ரூ. 50லட்சம் மதிப்பில் பொருள் சேகரிக்கும் பொருட்டு செல்வாக்கு மிக்க திருக்கூட்டம் ஒன்று தோன்றியுள்ளது. டாக்டர் சர். ஏ. ராமசாமி முதலியார் இதன் தலைவர். டிசம்பர் 12-ல் இதன் நடவடிக்கைகளை சென்னை அறநிலைய ஆணையர் அலுவலகத்தில் முதலமைச்சர் தொடங்கி வைத்தார். ஆணையர் திரு சாரங்கபாணி முதலியார் அறிவித்த செய்தியாவது; திருவரங்கர் பதினொரு ஆழ்வார்களால் மங்களா சாஸனம் செய்யப்பட்டது. ஆண்டு முழுவதிலும் 322 திருநாட்கள் நடைபெறுகின்றது. ஏழு திருச்சுற்றுக்களும் 21 கோபுரங்களும் 31 சந்நிதிகளும் கொண்டது. திருவரங்கத்தின் துணைக் கோயில்களான உறையூர், திருவெள்ளரைக் கோயில்களையும் புதுப்பிக்கவேண்டியுள்ளது. இதற்கு 50 லட்சம் தேவைப்படும். வைணவ மடங்கள் இத்திருப்பணியில் பங்கு கொள்ளவேண்டும்.

தலைவர் ராமசாமி முதலியார் பேசுகையில், பாரத நாடு முழுவதுக்கும் பொதுவான திருக்கோயில்களில் திருவரங்கப் பெரியகோயில் ஒன்றாக விளங்குவதால் இந்தத் திருப்பணிக்கு அகில பாரத அடிப்படையில் ஒரு குழு அமைக்கப்படுமென்று அறிவித்தார். அறநிலையப் பாதுகாப்புச் சட்டம் 45 ஆண்டுகளுக்கு முன்பு இவரது பெருமுயற்சியால் நிறைவேற்றப்பட்டதென்றும் அவர் குறிப்பிட்டதுடன் இதை தமிழக அரசாங்கம் நன்கு அமுலாக்கிவருவதைப் பாராட்டினார். முதலமைச்சர் பேசுகையில் வடக்கேயுள்ள இந்து மக்கள் திருவரங்கத்தைத் தரிசிக்க வந்து கொண்டேயிருக்கிறார்கள் என்றும் மிகவும் பிரசித்தமான இந்தர கோயிலையும் மதுரை மீனாட்சியம்மையையும் காண்பதற்கென்றே யுகோ அதிபர் டிட்டோ மறுமுறையும் சென்னை வந்த செய்தியை நினைவூட்டினார்.

அறங்காவலர் திரு ஸ்ரீநிவாசன் அவர்களின் சார்பாக குழுவினர்க்கு வரவேற்பும் நன்றியும் கூறப்பட்டது.

[1-ம் பக்கத் தொடர்ச்சி]

புலந்த்ஷஹர் ஜில்லாவிலிருந்து சுமார் 25,000 பேர் இன்று ராணுவத்தில் சேர்ந்துள்ளனர். இந்த ஜில்லா இன்னமும் அயராது நாட்டின் பாதுகாப்புக்கு எல்லா வகையிலும் உதவி வருகிறது. பராஸு கிராமத்தைச் சேர்ந்தவர் ஸ்ரீ துகார் சிங். இவருடைய ஒரே ஒரு மைந்தன், ஆக்கிரமிப்பை முறியடிப்பதில் ஆவி துறந்துவிட்டார். அரசாங்கத்திடமிருந்து பெற்ற உதவித் தொகையையும் ஸ்ரீ துகார் சிங் தேசீயப் பாதுகாப்பு நிதிக்குக்கொடுத்துவிட்டார்.

நாடெங்கும்கிளர்ந்தெழும் தியாக உணர்ச்சிகளைத்தான் மீரட்டும், புலந்த்ஷஹரும்பிரதிபலிக்கின்றன. காஷ்மீரிலிருந்து கன்னியாகுமரி வரையும், மகாராஷ்டிரத்திலிருந்து மணிப்புர் வரையும் தாய்நாட்டுப் பற்று எல்லாத் தியாகங்களையும் செய்ய இன்று மக்களை ஒரே அணியில் திரண்டெழச் செய்துள்ளது. நாடு பலமாக இருந்தால்தான் அது பத்திரமாகவும் இருக்கும். எனவே, தாய் நாட்டைப் பலப்படுத்தும் அரிய முயற்சியில் அனைவரும் தீவிரமாகப் பணியாற்றி வருகின்றனர்.



Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy
Annual Subscription Including 4 special numbers Rs. 10. Single copy : Twelve Paise.